உ

ஸ்ரீ ரஸ்து.

# கலியாண நலுங்குப்

முதல் பாகம்

இஃது

திருநெல்

பிரஹ்ம

D. N. முத்துஸ்வாமி

அவர்களாலும்

வேறு சிலவித்வான்களாலும்

பாடப்பெற்று









ஷையாரால்

திருநெல்வேலி

தாராம் பிரஸில்

ப்பிக்கப்பெற்றது.

டர் காப்பிரைட்.

1925 ( அணா $2\frac{1}{2}$.



உ

ஸ்ரீ ரஸ்து

# நலுங்குப் பாட்டு.



## 1. ராகம் சங்கராபரணம்

ஸ்ரீராம ஜெய ஜெய—சீதேம ஞேஹரா
காருண்யா ஸாஹரா—கருணாநீ ஜெய ஜெய 1.

சீதையுடன் ரெகுபதியும் சிறந்த சிம்மா சனத்திருந்து
நலுங்கிடவே மாதரெல்லாம் நாகரீகந் தானாக 2.

சந்தனத்தால் தரைமெழுகி குங்குமத்தால் கோலமிட்டு
சங்காரும் அம்பிகையும் இங்கிர்தமாய் வீற்றிருந்தார் 3.

பச்சைமஞ்ச ளரைத்தமஞ்சள் பருப்புடனே உப்ப
சுதை
சுட்டதொரு அப்பளமும் சொர்ணத்தட்டில் கொண்டு
வந்தாள் 4.

உயர்குலத்தோரிவரெனவே உத்தமர்கள் கொண்டாட
தயைமிகுவே தோத்மனெனும் சற்குணனே ஜெய
ஜெய 5.

ஈஸ்வரனர் புத்திரனே யெங்கும்புகழ் மித்திரனே
ஐங்கரனுக்கிளையவனே அருமையுள்ள வேலவனே 6

வள்ளி தெய்வானை மகிழும் புள்ளிமயில் வாகனனே
துள்ளிவளர் பாலகனே துரிதமுடன் நலுங்கிடுவீர் 7.

ஜாதிமணச் சந்தனமும் சாந்துடனே ஜவ்வாதுகளும்
தாதியர்கள் சூழ்ந்துவர தயவுடனே நலுங்கிடுவீர் 8.

மல்லிமுல்லை யிருவாக்ஷி மலர்களுடன் ரோஜாவும்
செண்பகமும் மந்தாரை சேகரித்தேன் நலுங்கிடுவீர் 9

பன்னீரு சம்பங்கிப்பூ பலதினுசும் சேகரித்து
அத்தர்வில்லை யடுக்குடனே அனுபவித்தே நலுங்
கிடுவீர் 10.

வெற்றிலையும் அடைக்காயும் வெள்ளித்தட்டமீ
தெடுத்து
பக்தியுடன் லவங்கங்களும் பவுஷுடனே நலுங்கிடு
வீர் 11.

வேதியர்கள் சூழ்ந்திருக்கும் விவாஹமது மேடையிலே
மாதுயானும்நலுங்கிடுறேன் மாயவனேயாசிகூறும் 12

## 2. மத்யமாவதி ராகம்

நலுங்கிடா பிலச்சேரு—நவமோகனுங்கி முத்து
விலத்திரா சீதம்மா— வேகார வம்மா 1.

அத்தரு பன்னீரு மஞ்சி அரசேதா பூசி
விலத்திரா சீதம்மா வேகார வம்மா 2.

குங்குமம் கஸ்தூரி மஞ்சி கெந்த மூனு பூசி
எங்கும்புகழ் பெறவே நாம் இருவர் நலுங்கிடுவோம் 3

ஆராதாரம் தாண்டி ஆநந்த மயமனே
பூர்ண வடிவுள்ள ஹரி நாராயணன் சிரமேல் 4.

ஓங்கார மானதொரு வுப்பதைத்தாரும்
பாங்கா யிருகரத்தால் பரிவாய்ச் சேர்க்கிறேன் 5.

பரிபூர்ண மானதோர் பருப்பதைத்தாரும்
கரியமாலே வும்மிட கண்டத்துமே விடுகிறேன் 6.

ஆங்கார மன்னதோர் அப்பளாந்தன்னை
யேங்காமல் அடியாள் இருகையால் தட்டினேன் 7.

## 3. ஸ்ரீ ராகம்

### கோவிந்தரைப் பணிவோ மேன்ற மேட்டு

ராராகோபாலா நலுகிட ரமணி சிங்கார ஒய்யார வதனு
வாரீச மலர் தன்னி லுதித்த ஸ்ரீ லக்ஷ்மி
நாதா ஸ்ரீ போதா தாமோதர ஹரி ஹரி—ராரா 1.

பந்த சொந்த மற்ற மண்டபத்தில் பிரணவாக்ஷரத்தில்
பீடம் அமைத்து வைத்தோம் க்ஷணத்தில்
அந்தரங்க இருதயம் அறிந்த யெந்தனோடு
ஆண்டவனே திருவுள்ள மிரங்கியருள்—ராரா 2.

சோதிமயமான மண்டபத்திலும் மிட சேவைக்கு
காத்திருக்கிறார்களி க்ஷணத்திலே
பிரீதியுடனே திருவடி தன்னிலே
புகழ்ந்து நலுங்கிட போற்றுகிறேன் ருக்மணி—ராரா 3

### 4. வந்தனம் தந்தேன் யென்ற மெட்டு

நலுங்கிடவாரும் சுவாமி—துலங்கிட நீரும்.
1. சுடராழி கொண்ட யெந்தன் வடபத்ர சயனா
அடியாள்மீதில் மனதிரங்கி ஆனந்த விலாசத்தில்
அன்புடன் புகழ்ந்திட சிந்தையால் மகிழ்ந்திட நலுங்
2. ஜென்மத்திலென்ன தாங்கள் செய்திருந்தேனோ
பிரஸன்ன வடிவுள்ள ராஜகோபால அவதாரமாய்
மன்னன் வசுதேவரோடு மனக்கவலை விடுத்த நாதா.

### 5. கற்பகத்தருவைப்போன்ற யென்ற மெட்டு
### தோடிராகம்
### பல்லவி

ராராநலுங்கிடரமண வொய்யாரா ராதாமனோகரா
ளரா நீ குயிந்த கோபமெந்து குராசாமி—ரா 1.

காரிய காரணதார்த்தமாகி யெந்த கபட நாடகசூத்ரா
கோரிய பக்தர்கட்கருள்புரியும் திவ்யசுந்தயநயனா
ஹரி ஹரி—ராரா 2.

அண்டர்க்கும் ஆண்டவராய் அவனிதனிலுதித்த
ஆதிஜெககாரண
தண்டுள பரதரித்த தாமோதரா மகிழ்தாரீர் திரு
வடியை—ரா 3.

6. விசுவேசா உந்தன்பாதம் யென்ற மெட்டு.

முகாரி ராகம்

பல்லவி

நலுங்கிடவாரும் கண்ணா நவரத்ன மண்டபத்தில்
துலங்கு ருக்மணியுடன் சிம்மாஸனந்தனிலே.

1. மன்னன்பீமராஜனிடகன்னியெனும் ருக்மணியாள்
உன்னித சிம்மாசனத்தில் வுகந்து நலுங்கிடவே
வாருமே கண்ணால் பாருமே கலிதீருமே—நலு

2. அண்ட பிண்ட முண்டவனே ஆலிலைமேற்
கொண்டவனே
தண்டுளபம்பூண்டவனே தையல் ருக்மணியுடனே
அய்யனே மெய்யனே ஆழிமையனே

7. சுந்தரேசா இந்தவேளை யென்ற மெட்டு

பங்கஜாக்ஷாவும் முடைய பாதாரத்தில் நலங்கிட
சிங்காரமண்டபந்தன்னில் சீக்கிர மெழுந்திரும்

1. உம்பர்களிடுக்கந் தீர்க்கவுத்தமகுல முதித்த
செம்பொன்றிருவடி தனிலே சிந்தித்து நலங்கிட—பங்

2. வஞ்சகமாய் கோகுலத்தில் வந்த சகடுதைத்த
கஞ்சமலர் பாதந்தன்னில் காக்ஷியாய் நலங்கிட—பங்

3. கல்லாகிய அகலியர்க்கு காக்ஷிதந் தருளிய
வல்லவனே நின்னுடைய மலரடி நலங்கிட—பங்

8. ராரா ராஜகோபாலா யென்ற மெட்டு.

வனச மலருதித்த மங்கை லக்ஷ்மி
நாதாபோதா பாதத்தைத்தாரும்—வனச

1. வானோர்க்கமுதளித்த மந்தகாசனே
தாரும் தீரும் பாருங் கண்ணினால்

2. வசுதேவர் புத்திரராய் வந்துதித்ததோர்
பார்த்தன் சூதா வாதா யேதரியேன்—வனச

3. கபட நாடகம்செய்த கார்மேகவண்ணா
கடைக்கண்ணாலெந்தன் இடுக்கந்தன்னைத் தீரும்—வ

## புருஷர் நலுங்கு

விடமுசாயவே யென்ற மெட்டு கரகரப் பிரீயை ராகம்

பல்லவி

நலுங்கிடாராவே ருக்மணி நாதிசப லோனு

1. பாவையே கேளாய் எந்தன் பாவை
பளிங்கு மண்டபத்தில் பூவையே நீ மகிழ் பூர்ண வடி
2. வாரீச மலர்மதனி மங்களகுணயனி [வுடன்
பாரீர் கண்ணாலே என்னைப்பாரீர்
பஞ்சமுடனே கூறிய வரமருள் கோபால நானே
3. குடிலகுந்தள மாதே கோலமாயிப்போதே
தடையொன்றும் பேசாதே தையலென்கோதே
ஜடுதியில் வருவாய் சாமளிருக்மணி—ராவே

உத்தம துரைமார்களா யென்ற மெட்டு.

கமாஸ் ராகம்

பல்லவி

நலுகிடராவேயம்பா நளினபதமுலோனு
பீலுவாபிலுவங்கயீ பிகுவசே சேதியேமோ—நலு
1. பந்தபவம் போக்கவைக்கும் சுந்தராங்கி யெந்த
அந்தரங்கத்துடன் கூடி விந்தையாய் நலுங்கிடவே
2. அஷ்டைஸ்வர்யமடைந்த ஆதிலக்ஷ்மியே யுந்த
மட்டற்ற பாவாரந்தன்னில் மகிழ்ந்து நலுங்கிடவே
3. கன்னல்மொழியுற்ற மாதே அன்னநடை போன்ற
இன்னும் தாமசம செய்யாதே யெங்கும் புகழ்ந்திடும்.

## கிருஷ்ணலீலை

1. கிருஷ்ணும்புஷ்ய வாளா கிருபையாளா பத்மநாபா
அஷ்டாக்ஷரப்பொருளே கிருஷ்ணன் அருகிலோடி
வாரும்

2. தங்கமேயிந்திரநீலமேசுவாமிசுந்தராபுரிச்செல்வமே
மங்களம் சிறுநாளும் கிருஷ்ணன் மாயையா லோடி
வாரும்

3. உரியில் வெண்ணை திருடி கிருஷ்ணன் மத்தாலடி
பட்டீர்
சித்ராபுரி வீதியில்கிருஷ்ணன் சிறித்தாலோடிவாரும்

4. உரியில் வெண்ணை சிந்தித்தோ கிருஷ்ணன் கமல
முகம் வாடித்தோ
சித்ராபுரி வீதியில் கிருஷ்ணன் சிறப்பாயோடிவாரும்.

5. கையில் களவிருக்க உமைககண்டபேர்களுமிருக்க
நெய்யிலே கைவிடுவீர் கிருஷ்ணன் நீண்டபெருமாளே

6. கட்டக்கயரில்லையே உமை யடிக்கமனம் வல்லையே
துஷ்டத்தனம்வெறுத்து சுவாமி துரையே ஓடிவாரும்

## வேறு நலுங்கு

### பல்லவி

நலுங்கிடரையயா சுந்தரேசா நலுங்கிடரையா

1. நலுங்கிடரையா நீவு நாகரீகமுகானா
கலுவுலகுலபொலுகனுல மீனாக்ஷிக்கு நலுங்கிடரையா

2. அந்தரு பன்னீரு பசுபுலு மேதிஞ்சி
ஆலாஸ்ய சுந்தர அம்மா மீனாக்ஷிக்கி நலுங்கிடரையா

3. ஆகிரட் நாலுபொய்கை அபாஞ்சி பீண்டலா
கோதை நாச்சியாரம்மா கொலுவுலு வுண்டங்கா
நலுங்கிட

4. மல்லிகை முல்லையுடன் மணமுள்ள யிருவாச்சி
செண்பகமலருடன் சிவசுந்தரர்க்கு—நலுங்கிட

வேறு

நலுங்கிடவாரும் பிராணநாதா நாழிகை யாச்சுதே

1. அம்மி மிதித்து அருந்ததி பார்த்து
அழுந்தத்தாலி கட்டினீரே— நலுங்கிட

2. பன்னீரும் சந்தனமும் பரிமள மிகப்பூசி
உன்னிதமாக வுபசரித்தும்மை—நலுங்கிட

3 வேதங்கள் கீதங்கள் யாவரும்பாட
விசித்திரமண்டபந் தன்னிலிருந்து— நலுங்கிட

4. சின்னவயதுடை யாளுமைக்கூடியே
சிறப்பான கையைப் பிடித்துமே யானும்—நலுங்கிட

5. மல்லிகைமுல்லை யிருவாச்சி பந்துகள்
வல்லபமாயிங்கு ஆடிடுவோம் நாம்— நலுங்கிட

6. பாரதநாடு ஓங்கி வளர்ந்திடும்
பகவான் காந்தி யருளதினாலே—நலுங்கிட

வேறு

வாவா வேலய்யனே வாவா மாமயிலேறி—வாவா.

1. வரவா மணிப்பந்தலிலே மணவரை யலங்கரித்து
தேவாதிதேவரெல்லாம் சிறப்பாய் நலுங்கிடவே—வா

2. சூராதி சூரபத்ம சூர ஸம்ஹாரம் செய்த
வீராதி வீரங்கொண்ட வேலா நலுங்கிடவே— வா

3. மல்லிகை முல்லைரோஜா மணமுள்ள செண்பகமே
வல்லபமாகக்கட்டி வந்தேனிதோ பாருமே— வா

4. அத்தருடன் சவ்வாது பன்னீருஞ்செண்டுடனே
சித்தமாய்க் கலக்கிட்ட சேர்வைச் சந்தனமிது வாவா

5. சந்தனம் பூசிடவே தாரும்நல் மார்புகையை
விந்தையாய் பாடி விளையாடிடக் காலமிதே— வா

6. இந்தியர்க் காசுஓங்க எல்லாம்வகிக்கும் காந்தி
சிந்தையில் நீரேநின்று சிறப்பாய் மதித்திடுவீர்—வா.

நோட்டு.

வாரும்சார் நலுங்குகக்கு வாசுதேவ புத்திரரே.

1. மணவரைப் பந்தலிலே பட்டுமெத்தை விரித்திருக்கு

பெண்களெல்லாம் கூடிக்கொண்டு ஸ்ரீங்காரம பாடுகிறார்—வாரும்

2. தேவாதி தேவரெல்லாம் திவ்யரத்ன மண்டபத்தில்

பாவலரோடுகூடிடவே பந்தாடி சுகித்திடுவோம்—வா

3. கண்டசரம் தான்பதைக்கம் காசுமாலை தானணிந்த

தண்டுளப மார்பதனில் சந்தனமும் பூசுகிறேன்—வா

4. அத்தருடன் ஜவ்வாது அழகாம்பன்னீர் செண்டுடனே

சித்தம்களி கூறிடவே திரேகம்தன்னில் பூசுகிறேன்—

5. உத்தமர்கள் கூடிடவே உமதழகை காட்டிடுவீர்

பக்தர்க்கருளும்தந்திடுவீர் பரமதயாளுமானவரே—வா

6. சுந்தரமான பெண்களையும் சொகுசாய்லீலை புரிந்திடுவீர்

வந்திடும்மீர் பந்தலுக்கு அன்பாய்ப்பந்துகளாடிடவே. வாரும்சார்.

வேறு

நலுங்கிட வாரும் நெல்லை நாதனே யென்சாமி

நாதனே யென்துரையே. —நலுங்

நன்மைதரும் காந்திமதி அம்மனூஞ்சல் மண்டபத்தில்

1. தேவாதி தேவரெல்லாம் திவ்யரத்ன மண்டபத்தில்
பாவலரும் கூடி நம்மை பாடித் துதித்திடவே—நலுங்

2. மணவரைப் பந்தலிலே மங்கையர்கள் கூடிநிற்க
குணமாக நாமிருவர் கூடிப்பந் தாடிடுவோம்—நலுங்

3. அம்பத்தாறுதேசமன்னர் அனைவருமேவீற்றிருக்க
செம்பவள வாயினாலே ஸ்ரீங்காரம் பாடிடவே—நலுங்

4 மல்லிகை முல்லைரோஜா மனோஞ்சி தத்துடனே
நல்லதொரு செண்டுகட்டி நாமும்பந் தாடிடுவோம்—ந

5. தேசங்களைக் காக்கவந்த தினதயாளு மகான்
பாசமுள்ள காந்திமகான் பக்திமிக ஓங்கிடவே—நலுங்

6. வீராதி வீரவிஸ்வ போகவசந் தருமே
பாரத பூமியையும் பாதுகாத்து ரக்ஷிப்பார்.—நலுங்

## வேறு

1. மன்னவனே வள்ளியுடன் மல்லிகைப்பந் தாட வாராய்
அன்னநடை மாதரெல்லாம் அன்புடனே காத்திருக்க.

2. யெத்தனையோ புஷ்பங்களை யெடுத்தெடுத்து விதவிதமாய்
அத்தனையும் பந்துகட்டி அன்புடனே காத்திருக்க—ம

3. பக்தியுடன் பந்தெடுத்து பந்தயத்தோ டாடிடுவோம்
சக்தியுள்ள வள்ளியாளும் சந்தனமும் பூசுகிறேன்.—ம

ராகம் சுருட்டி. ஆதி தாளம்.

பல்லவி.

இதுநல்ல ஸமயமையா—பக்தருக்கருள்
ஈசுவரதேவனே பார்வதியாள் பாலனே.—இது

அனுபல்லவி.

மதுமுக்கனி கலந்தவமுதனேவாழ்
கழுகாசல முருங்குமுதனே. இது

1. விருதுகளுடன்கூடி வேட்டைக்கானகம் நாடி
அறுசுவைக் கனிதேடி அன்புடனே விரைந்தோடி
குருவி யோட்டிநிற்குங் குறவள்ளியால் வாடி
வரும்பக்த கூட்டங்களுடன் வர்வைப்பாடிஆடி—இது

2. மீனின் விழியாளே மெத்த மனதுறைந்து
கானகமெலா மலைந்து கடுகியோடி நடந்து
தேனும் தினைமாவுங்கூட்டி தினைப்புனத்தில் கலந்து
பாடும் பார்வதிபுரீ தாஸனை மனமகிழ்ந்த. இது

ராகம் சங்கராபரணம். ஏகதாளம்.

பல்லவி.

1. ஸஸககஸஸ ககமப மகரீ மதப மபமகிரி பமகரிஸா

### அனுபல்லவி.

2. பாபபாப மப ஸா ஸநிஸா பாநிபா மரீ பமகரிஸா.

### சரணம்.

3. ஸஸ கக ஸஸகக மபமகரீ மதபமபமகரி பமகரிஸா
மமத மததநிதபா கமபதபா கரி கமபதபா
கமபதப மகரி பமகரிஸா. ஸஸ.

### பூமிபுகழும் ஆலாஸ்ய மெட்டு.

1. சுந்தரிருக் மணியாளே யெந்தனோடு நலுங்கிட
அந்தமாய் சிம்மாசனத்தி லானந்தமாய் வந்திட்டா

2. வாசனை பரிமளத்தானுன் மங்கள முகாரத்தில்
பிரகாசமுடன்பூசுகிறேன் பொற்கொடியென்கரத்தால்

3. செண்பக பாரிஜாதமோடு சென்னியிலேசூட்டி
அன்புட னருகில்வாராய் அன்னம்போன்ற தையலே

4. சந்திரவிம்பம்போன்றதோர் சட்டமானநெற்றியில்
யெந்தனிட கையினாலே இடுகிறேன் குங்குமந்தான்.

### ஷி வாசுதேவனே யென்ற மெட்டு.

அம்பா நலுங்கிட மதுராம்பா நலங்கிட.

1. பீமராஜன் குமாரி புண்ய ரெக்ஷசோதி
ஜெகதா மனோட்பாரி
ஜெகதாமனுட பாரிவந்தன் சரணத்தில் மஞ்சளாலே.

2. தஞ்சமென் பக்தர்களை தர்காத்திடுபவனே
வஞ்சஞ் செய்யாமலே
வஞ்சஞ்செய்யாமலென் னேடுமந்தகாசத்துடனே.

3. கோரவினையொழிக்கும் நாரணன் பாரியாளே
பாராய் கடைக்கண்ணால் என்னை
பாராய்கடைக்கண்ணாலே பாண்டவரைக்காற்றவளே.

கஞ்சதளநேத்ரி யென்ற மெட்டு.

1. நலுங்கிடவாருங்கண்ணா நவரத்தின மண்டபத்தில்
துலங்கும் ருக்மணியுடன் சோற்பிரகாச வடிவாய்

2. மச்யாவதாரங்கொண்டு மதுகைட வாளைவென்ற
அச்சுதனே யெழுந்து ஆனந்த மண்டபத்தில் 180464

3. பனக சயனொனும் கண்ணா யெழுந்தருளீர்
வுன் சிம்மாசனத்தில் ஒகந்து நலுங்கிடவே.

சிந்தயமா யென்ற மெட்டு.

பைரவி ராகம்.

பல்லவி

நலுங்கிட ராரா — ஸ்ரீ கோபாலா.

அனுபல்லவி.

லளித ருக்மணி லோலா.

1. உலக முழுதுண்டு ஆலில்வுகந்து சயனித்தநாதா
மகிழ்வா யெழுந்தருளி திருமணவரையி லமாஸ்வாமி.

2. கெங்கை ஜெனித்த பாதாரவிந்தந்
தன்னிலானந்தம்
மங்களகுணசாந்த மதனவொய்யார சுந்தர
கந்தமலர் புஷ்ப சந்தனை தாம்பூல வாசத்தால்

முடுகு.

என் செங்கமலத் திருகைகளினாலே
திலகபொட்டு நெற்றியிடுகிறேன் மேலே
மங்கைகுணதிரு நேத்திரத்திலே
மகிழ்ந்திட ரக்ஷித்திடும் திருமாலே. நலுங்.

பல்லவி.

ராரா நலகிட ராஜகோபா லுடா
வராஞ பைராமா ஜாலம்யாலாராசாமி —ரா

1. சுந்தர வடிவுற்ற சுஜனசம் ரக்ஷண
மந்தகாசமாய் விளங்கும் ஒய்யாரனே —ரா

2. பங்கஜனைப்பெற்ற பக்தவத்ஸலா வும்மிட
சித்தடி தனில்திவ்ய விஸ்தார நலங்கிடரா. —ரா

நலுங்கிட பிலச்சேவோ என்ற மெட்டு.

1. நலுங்கிட பிலுச்சேவோ நவமோகனுங்கி முத்து
விலத்திர சீதம்மக்கு லேதர ருவம்மா
2 ஸ்ரீ ஜானகி தேவி சீதாதன் பிராட்டி
ருச்சுக்க மிகபாணி ரவணகல்யாணி
3. சாகர தெரிவிளக்கம்மா வேசாரதாரி
நீட்டுக்கா வொருகாலுக்கு பாட்டக்காபாடே
4. பச்சிப்புனுதுல்ல பன்னிட்ட நாரி
பச்சாக்கு பசுப்புல்ல பெச்செல்வரம்மா
5. மருவிஞ்சு பன்னீரு மத்தளமாடி
ஸ்ரீரெங்கநா துடிக்கி பைசெல்வரம்மா
6. மல்லிப்பூலச்செண்டு பந்துகாசுட்டி
அதிரெண்டுக்காகட்டி பூலச்செண்டாடரே பாலா
யிதூரு.

நலுங்கிட வாரும் நேல்லை யென்ற மெட்டு.

1. நலுங்கிட வாருமுருகேசனே யென்சாமி
நாயகியாள் வள்ளியுட னூஞ்சலின் மண்டபத்தில்—ந
2. தேவாதி தேவர்களும் திவ்யரத்ன மண்டபத்தில்
காவலரும் கூடிடவே நாமும்பாந் தாடிடுவோம்— ந.

3. மணவரைப் பந்தலிலே மங்கையர்கள் கூடிநிற்க
குணமாக குண்டுமல்லி செண்டுக ளாடிடுவோம்— ந.

4. விஸ்வகர்மாசிருஷ்டிசெய்த விசித்ரமண்டபத்தில்
வேலவராம் உம்மைக்கூடி வேடிக்கைப்பந்தாடுவோம்

5. காசுமாலை வங்கியுடன் கண்டசரம் அட்டியலும்
நேசமுடனணிந்துகொண்டு நீருநானும் பந்தாடுவோம்

6. கொச்சிமஞ்சள் குடகுமஞ்சள் குங்குமங் கஸ்தூரி
மெச்சிடுஞ்சவ்வாது அத்தர் மெல்லியாளும்கொண்டுவந்

7. சூரனைவதைத்தநாதா சுப்ரமணிபாவுனக்கு (தேன்
ஆரங்களும் சாற்றுகிறேன் ஆசியுங்கூறிடுவீர். நலுங்.

நலுங்கிடவாரும் பிராணநாதா என்ற மெட்டு.

பல்லவி.

நலுங்கிடவாரும் துரையேயிங்கு
நாமும் பந்துக ளாடிடுவோம்.

அனுபல்லவி.

நானுமே யுந்தன் மீதினிலன்பை
நாடியே வந்தேன் கூடியே சுகிக்க. ந.

1. வேதங்க ளோதும் வேதிய ரோத
விண்ணுலகம் புகழ் தாசிகள் பாட. ந.

2. பாதத்தில் நலுங்குகள் செய்கிறேன் சாமி
பக்தியுடனத்தர் பன்னீர் தெளித்து. ந.

3. முத்துச் சரப்பளி யணிந்திட்ட மார்பில்
மோதிரக் கையுடன் சந்தணம் பூசுறேன். ந.

4. லஸ்தர் குளோப்புடன் எலக்டிரிக் லாம்புகள்
லக்ஷணமாக வமைந்திட்ட பந்தலில். ந.

டல்லவி.

ராரா நலகிட ராஜகோபா லுடா
ஏராஞ பைராமா ஜாலம்யாலரா சாமி ரா.

1. சுந்தர வடிவுற்ற சுஜனசம் ரக்ஷண
மந்தகாசமாய் விளங்கும் ஓய்யாரனே—ரா

2. பங்கஜனைப்பெற்ற பக்தவத்ஸலா வும்மிட்
சித்தடி தனில்திவ்ய விஸ்தார நலங்கிடரா.—ரா

3. வாரணனை ரக்ஷித்த பூரணனே வுந்தன்
சீருட திருவடி சிந்தித்து நிலங்கிட.—ரா.

பந்தயங் கேலித்தே நானே யென்ற மெட்டு.

பல்லவி.

நலுகுகுரா ராரா நா சின்னி கிருஷ்ணுடா.

அனுபல்லவி.

1. பலபத்ர மனுஜா விந்தன் துலங்குந் திருவடியில்
கலந்தபசு மஞ்சளால் காத்தினாலே யெடுத்து-ந.

2. கோடிசூர்ய ப்ரகாசா குடிலருக் மணிநேசா
ஈடில்லா முகவுல்லாசா இத்தரையும் நலங்கிட-ந

3. காலசக்ரந் தரித்த நீலமேகா வுந்தன்
லீல குணத்தினால் கோலா கலத்துடனே.—ந.

யெந்துக்கு வாடலகிநாடு யென்ற மெட்டு.

சங்கராபரணம்.

1. கபடநாடக சூத்திரவும்மை கண்ட மாத்ரமே
ஜென்மசபலமானேன் ஸ்ரீ ஹரியிருதிருவடிதன்னில்.

2. கன்றை விசிாவிலெறிந்த கமல நேசனே
குன்றைக்குடை யாகயேந்துங் கோபாலரே.

கார்க்கவே வருவாயே யென்ற மெட்டு.

தன்யாசி ராகம்.

பல்லவி.

கோதையே கண்பாராய்—கோபமில்லாமல்
ராதையே கண்பாராய்.

அனுபல்லவி.

சீதையே நோய் சிங்காரமாக கோதை.

1 சோம சவுந்தரி சகுண நிரந்தனி
காம ஜெனுதரி கபட நாடகம்பாரி. கோ.

2. தஞ்சமென்றோரைகார்க்கும்கஞ்சமலர்பாதத்தில்
மஞ்சளிடுகிறேன் மதனவொய்யாரியேகோதை.

3. அஷ்டாக்ஷரப் பொருளார்பட்ட பூதேவியாம்
இஷ்டலக்ஷிமியாளுடன் இருபாதம் நலுங்கிட.

## செஞ்சுருட்டிராகம்.

பல்லவி.

நலகு ரகுராரா சாமி நலகுரி லோனு.

1. வசுதேவ தவபாலா அசுரகுல காலா
பசுபதி கீதஜாலா மாமவி லோலா.—ந.

2. நவரெத்ன மண்டபத்தில் நாரதாதிசூழ்
பரிபூர்ண கருணையோடு பாதாரத்தைத்தாரீர்.

3 தஞ்ச ரெக்ஷகாவுந்தன் சரணா வந்தத்தில்
பசுமஞ்சளா லலங்கரிக்க வரமாளும்போதா.—ந

## காம்போதி ராகம்.

பல்லவி.

தேசசேனு ஸ்ரீஜெகருக்மணி எஸ்சுகதன சகிஜெனுல
தோகூட ஒச்சோரா தேசசேரா. தேச.

1. அச்சுதன் பாரியாள் அன்னை ஸ்ரீ ருக்மணி
மெச்சியே தேவர் மலர் மாரிவருஷித்திட. தே.

2. சங்கை யில்லாதமேதார் மங்கையர் புடைசூழ
சதுரங்க தளத்துடன் அதிது குசாகவே
மங்கள வாத்தியங்க ளெங்கு முழங்கி
மாதவ ஸ்ரீதர கோவிந்தரை நினைத்து. தேச

சசாரு ராகம்.

பல்லவி.

நலகிடரா நாதோநீவு நாதகுருசாமி
பிலுவா பிலுவங்கயிந்த பிகுவசே சமேமோ.

அனுபல்லவி.

1. மோடிசெய்யாமலே முத்துசாமி யெழுந்தருளும்
ஈடில்லா வந்தனுட பிருகமலத்தைத்தாரும். ந.

2. முப்பத்துமுக்கோடிதேவர் மும்மூர்த்திசொரூபா
வும்மிட
அற்புதமான சேவைகாண அனைவோரும் காத்
திருக்கிறார்.

3. வசுதேவா தவபாலா மண்டபம் நலங்கிட
சிசுபால தெந்தவக்ரனை சிராமருத்தலோலா— ந

4. உத்தம புல்லாணிநக ருதித்த ஜெகநாதா
பக்தியுடன்பத்மாஸனி போற்றிடும்பதத்துக்களி.

## மோஹன ராகம்.

புவனம் புகழ்ந்திடும் மதனகோபாலா யென்ற மெட்டு.

### பல்லவி.

நலங்கிட வாராய் நவநீத சோரா
நிலங்குப்ராதா மங்கையோடு சிங்காரமண்டபத்தில்.

### அனுபல்லவி.

1. ஆரகுண்டலம் கிரீடம் சேயிக்க
மாரிலணிந்த முத்துமாலை மகாகண்டி பிரகாசிக்க.

2. பீதாம்பரமொடு பொன்னரைஞாணும்
ஜோதிவிடகந்தா முகாரங்கள் குளிர்ந்திட. ந.

3. பஞ்சாபிதமொடு பச்சை மாந்தாளி
குஞ்சலங்கள்குலுங்கிட கோலாகலத்துடன்கூட.

### பல்லவி.

ராரா தெசாதநந்தன நீகு நலுகு பெட்டுகோ ராரா
தாரசோரகருணலவால நின்னுவேடதனேநிபுகுராரா.

1. வாசனை பூஷணம் அலங்கிர்தமானவனசமலர்ராமா
நேசமா யெழுந்தருள் நித்தியானந்தா சித்தடி
நலங்கிடவே.

2 துவாரகாபுரி வாசா தையல் ருக்மணி நேசா
தாணிவுதித்த வாசா
பாதாரவிந்தத்தில் பக்தியாய் நலங்கிட
பாங்குடன் யெழுந்தருளும்.

## மங்களம்

ஸ்ரீகரா காருணகு ஸதுமிகம பீரனகு
பாகஸாஸ னருத்ர ப்ரணுது னகுனு
ஏகனக கஸ்தூரி செங்கேச பிரகலாதா
ஜேகோனி நயா நாரசிம்மு நன்னு— ஜெயமங்களம்

ராஜரா ஜேஸ்வரிக்கும் ரத்ன மகுடாதாரிக்கும்
மேலன சுகுணவதி மேஷாண்டிக்கும்
நவகோடி புண்ய நாதாந்த பேருக்கும்
நன்னுரக்ஷிஞ்சு தல்லி மீனாக்ஷிக்கு— ஜெயமங்களம்

அனவாத கல்யாண சுகலீலா புருஷா
அமுர்தகுண சுக வனக ஜெக துரிதயோகா
ஜெனகமுனிவோர் வந்து நடனமிகு பாதன
ஸ்ரீ பரமகல்யாண-சுந்தரர்க்கு— ஜெயமங்களம்

முதற்பாகம் முற்றிற்று

உ

# நோட்டீஸ்.



சகல கனவான்களுக்கும் தெரிவிப்பதாவது:—
ற்து வேண்டிய பலவித நூதன வர்ணமெட்டுக
லுவகுப்பாட்டுகள் 1, 2-பாகமும், ஊஞ்சல்,
சிறப்புத்தாலாட்டுகளும் அச்சிட்டு வெளியாக்க
ன்று சில கனவான்கள் கேட்டுக்கொண்ட பிர
ஸ்தகங்கள் சிறு சைசாக குறைந்தவிலையில் அச்
ாராக இருக்கிறது. இன்னும் அநேக கிரந்த
நம் தயாராகிறது. வேண்டியவர்கள் அடியிற்கண்ட
நக்கு எழுதிக்கொள்ளவும் ஷை புஸ்தகங்கள் தனித்
ம் அணா. $2\frac{1}{2}$ ஸந்தியாவந்தனபோதினி. அணா. 4
ளுக்கு பிரத்தியேக விலை. 5 புஸ்தகங்களுக்கு
வீ. பி. யில் அனுப்பமுடியாது வேண்டியவர்கள்
லாசங்களைத் தெளிவாய் எழுதியனுப்பிப் பெற்றுக்
ம்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்

காதேவாச்சாரியர் } D N. முத்துஸ்வாமி
வியாபாரம் கீழாத } உபாத்தியாயர் அன்சன்
திருநெல்வேலி. } கொல்லர்சந்து திருநெல்வேலி.